5th July 1962]

அங்கங்கே சில இடங்களில் தேவையான அளவுக்கு புதிய பள்ளிக் கூடங்களை திறக்க சாங்ஷன் செய்ய சர்க்கார் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** அது அந்தந்த மாவட்டத்தின் நிலைமையைப் பொறுத்து இருக்கிறது. எங்கெங்கு திறக்க தேவைப்படுகிறதோ அங்கங்கு திறக்க கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

**திருமதி பி. கே. ஆர். லட்சுமிகாந்தம் :** தலைவர் அவர்களே, ஜூனியர் பேசிக் ட்ரெயினிங் ஸ்கூல் ஏற்படுத்தாமல் இருப்பதற்கு சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** அப்படி ஒன்றும் உத்தேசம் இல்லை. வேண்டிய விவரங்களைப்பற்றி கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

**திரு. மீ. கல்யாணசுந்தரம் :** ஸார், ஆதாரக் கல்வி முறை நம்முடைய நாட்டின் தேவைக்கு ஏற்றதாக இருக்கிறதா ? அல்லது மாறுதல் செய்ய வேண்டியதாக இருக்கிறதா ? அதைப்பற்றி பரிசீலனை செய்து அதற்கு வேண்டிய மாறுதல்களைச் செய்வதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** எனக்குத் தெரிந்த வரையில் அந்தக் கொள்கையில் கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறோம். , அகில இந்தியாவிலும், மத்திய சர்க்காரிலும் அதற்கு வேண்டிய கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறார்கள். அந்த முறையில் நானும் கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறேன். அதன் முழு விவரத்தை ஒரு கேள்விக்கு பதில் சொல்லும் அளவில் விடை அளிக்க முடியாது. ஆகவே தனிக் கேள்வி போட்டால், அதைப்பற்றி பரிசீலனை செய்து பதில் சொல்லலாம்.

* 129 கேள்வி.—**திரு. கு. கோபால கவுண்டர் :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

*1962-63 நிதி ஆண்டில் செஞ்சி தாலுகாவில் ஆசிரிய ஆதார பயிற்சிப் பள்ளி திறக்க உத்தேசமுண்டா ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

**திரு. கு. கோபால கவுண்டர் :** சென்ற ஆண்டிலேயே இதற்காக முயற்சி எடுத்து கட்டிடம் கட்டுவதற்கு என்று பத்து ஏக்கர் நிலம் கேட்டார்கள். அதன்மேல் பத்து ஏக்கர் நிலம் விடுகிறேன் என்று எழுதிக்கொடுத்திருந்தேன். ஆகையால் இந்த ஆண்டிலாவது அதைத் திறக்க முயற்சி எடுப்பார்களா என்பதை அறிய விரும்பு கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் அங்கத்தினர் அவர்கள் இதில் இவ்வளவு அக்கரை செலுத்துவதற்கு அதை வரவேற்று அவரை நான் பாராட்டுகிறேன். ஏற்கெனவே அரசாங்கம் இனிமேல் பேசிக் ட்ரெயினிங் ஸ்கூல் திறப்பதற்கு இல்லை என்று முடிவு எடுத்திருப்பதால் இதை ஏற்றுக்கொள்வதற்கு இல்லை.